ஏற்பட்டிருந்தது. இவர்கள் இந்தியாவிலிருந்து வரும் 'இரகசிய' விஷயங்கள் எல்லாவற்றையும் உடைத்து தாக்கல் செய்துக்கொண்டு மற்ற டைரெக்டர்களுக்குத் தெரிவிக்காமல் அவைகளை 'போர்ட் ஆவ் கன்ட்ரோலுக்கு' அனுப்பிவைத்து வந்தார்கள். போர்டார் இந்தியாவுக்கு இரகசியமான உத்தரவுகள் ஏதாவது அனுப்பவேண்டியிருந்தால் அவற்றை இந்த இரகசிய கமிட்டியார் மூலமாக அனுப்பிவைப்பார்கள். இப்படி அனுப்பப்பட்ட விஷயங்கள் இந்த இரகசிய கமிட்டி மெம்பர்களாகிய அக்கிராசனாதிபதி, உதவி அக்கிராசனாதிபதியிவர்களைத் தவிர மற்ற டைரெக்டர்கள் யாருக்கும் தெரியவழியில்லை. இப்படி இந்தியா விஷயங்களை மேன்பார்வை செய்துவர 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' என்னும் சங்கத்துக்குப் பூரண அதிகாரமிருந்தும் கோர்ட் ஆவ் டைரெக்டர்கள் மூலமாயன்றி அவர்கள் நேரில் இந்தியா கவர்ன்மெண்டோடு கடிதப்போக்கு வரத்து வைத்துக்கொள்ளக் கூடாதென்கிற ஏற்பாட்டால், ஜனங்களுக்கு இவர்கள் உள்ளிருந்து அதிகாரஞ் செலுத்துவது தெரியாமல், எல்லா அதிகாரமும் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களாலே' செலுத்தப்பட்டு வருகிறதென்றும், எல்லா உத்திரவுகளுக்கும் அவர்களே காரணஸ்தர்களென்றும் ஒருவித தப்பபிப்பிராயம் எங்கும் சகஜமாய்ப் பரவிவந்தது. சுமார் 75-வருஷகாலத்துக்கு எல்லா மேன்பார்வை அதிகாரமும் விசேஷமாய்போர்டாராலே செலுத்தப்பட்டு வந்தபோதிலும் அவர்கள் பேர் எந்த உத்தரவு அல்லது கடிதத்திலும் காணப்படாமையால் வாஸ்தவத்தில் அவர்கள் செய்த உத்தரவுகளுக்குக்கூட 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களே' காரணஸ்தர்களாக எண்ணி அதனாலுண்டான பழிபாவங்களுக்கும் அவர்களே பாத்திரர்களாகக் கொள்ளப்பட்டார்கள். இரகசிய கமிட்டி யேற்பாட்டினால் கோர்ட் ஆவ் டைரெக்டர்கள் அறியாமலே அனேக பிரமாதமான விஷயங்கள் நடந்துவந்தன. அவற்றிற்கும் பாபம் அவர்களே உத்தரவாதிகளாகக் கொள்ளப்பட்டார்கள், உண்மையில், நடந்தவிஷயம் மற்ற ஜனங்களுக்குத் தெரிந்தபோதே அவர்களுக்கும் தெரியவந்திருக்கின்றன. உதாரணமாக 1838-ம் வருஷம் ஆப்கானிஸ்தான்மீது படையெடுத்துச் சென்றது 'போர்ட் ப்ரெஸிடெண்டு' முறையில் 'ஸர் ஜான் ஹாப்ஹவுஸ்' அவர்கள் செய்த உத்தரவை இரகசிய கமிட்டியார் தங்களதுபோல் இந்தியாவுக் கனுப்பினதன்றி வேறல்ல. இந்த உத்தரவினால் விளைந்த அநர்த்தத்துக்கெல்லாம் கோர்ட் ஆவ் டைரெக்டர்களே உத்தரவாதிகளாக எண்ணப்பட்டார்கள். கடைசியில் பார்லிமெண்டு சபைக்கமிட்டியார் செய்த விசாரணையில் 'ஸர் ஜான் ஹாப்ஹவுஸ்' அவர்களே சாக்ஷியம் சொன்னபோது, இது தன்னுடைய உத்தரவால் நடந்ததென்று சொன்னார். அவர் சொன்னது அப்பொழுது ஜனங்களுக்குள் அதிக ஆச்சரியத்தை யுண்டுபண்ணிற்று.

போர்டு ப்ரெஸிடெண்டு வேலைக்கு எப்போதும் மந்திராலோசனை சபையைச்சேர்ந்த மந்திரி யொருவரே நியமிக்கப்பட்டு வந்தபடியால் அவர் 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' என்கிற வெளிவேஷப்பேரைக்கொண்டு இந்தியா விஷயங்களை யெல்லாம் நடத்துவதற்கான ஸர்வாதிகாரத்தையும் தாமே செலுத்திவந்தாரென்பது மேலே எடுத்துக்காட்டிய விவரங்களால் தெரியவருமே. அவர் என்னதான் மேலதிகாரமுள்ளவராயிருப்பினும், அவர் தாமாக ஒன்றைச்செய்ய யத்தனிக்கவாவது, இந்தியாவிலுள்ள உத்தியோகஸ்தர்களுக்கு அதிகச் சம்பளம், இனம் அல்லது வெகுமதி கொடுக்கவாவது அவருக்கு அதிகாரமில்லை. எதுவும் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' பிரேரபணையின்பேரில் அது விஷயத்தைப் பார்லிமெண்டு சபைக்கு ரிபோர்ட்டுசெய்துவிட்டு அப்புறம்தான் செய்யவேண்டும். ஈஸ்திந்தியா கம்பெனியார் முதலில் ஈஸ்திந்தியாவிலும் கீழ்த்திசையிலும் வியாபாரம் செய்யும் பாத்தியதையை ஏகபோகமாக அனுபவித்துவந்தார்

கள். 1813-ம் வருஷத்தில் சீனா முதலிய கீழ்த்தேசங்களில் வியாபாரம் செய்வதற்கிருந்த சுதந்தரம் தவிர, மற்றப்படி இந்தியாவில் வியாபாரம் செய்வதற்கிருந்த சுதந்தரமெல்லாம் போய்விட்டது. 1833-ம் வருஷத்தில் வியாபாரம் செய்வதே கூடாதென்று தடுத்துவிடப்பட்டார்கள். வியாபாரமெல்லாம் போனபிறகு இந்தியாவிலுள்ள எல்லா உத்தியோகங்களுக்கும் நியமனம் செய்யும் சுதந்தரம்மட்டும் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களுக்கு' விடப்பட்டிருந்தது. கவர்னர்-ஜெனரல், கவர்னர் முதல் எல்லா ஸிவில் மிலிடெரி உத்தியோகங்களுக்கும் நியமனம் செய்யும் அதிகாரம் 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' அங்கிகாரத்துக்குமட்டுமுள்பட்டதாய் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களாலே' செலுத்தப்பட்டுவந்தது. வியாபாரம் செய்து ஏராளமான லாபம் கட்டிவந்தவர்களுக்குக் கடைசியில் இந்த உத்தியோக நியமன அதிகாரத்தைத் தவிர வேறு லாபகரமான வழியில்லாமற் போனதால் இதையே லாபத்துக்கிடாக வெண்ணி, உள்ள நியமனங்களை டைரெக்டர்கள் பங்குபோட்டுப் பிரித்துக்கொண்டு அவரவர்கள் பிள்ளை, மருமகன், மைத்துனன் முதலான உற்றார் சுற்றத்தார்களுக்கு ஜீவன வழியேற்படுத்திக்கொடுப்பதே தொழிலாக விருந்தார்கள். இந்த டைரெக்டர் ஸ்தானத்துக்கு நியமனம் பெறுவது சர்க்காராலன்றி, ஈஸ்திந்தியர் வியாபாரகம்பெனியில் மூலதனம் வைத்த பங்குச் சீட்டு வாங்கினவர்கள் கொடுக்கும் 'வோட்டு'களினால் இந்த டைரெக்டர்ஸ்தானம் கிடைப்பதாக விருந்ததால், அவர்களைப் பதப்படுத்திக் கைக்குள் போட்டுக்கொண்டு டைரெக்டராக வருவதற்காக ஒவ்வொருவர் செய்த யத்தனங்களும் விடாமுயற்சிகளும் இவ்வளவவ்வளவல்ல. பலதடவை தோல்வியடைந்தும் சலியாமுயற்சியோடு அந்தஸ்தானம் கிடைக்க யத்தனப்பட்டவர்களுக்குக் கடைசியில் அது கிடைத்துவிட்டால் உடனே இந்தியாவுக்குச் செய்யவேண்டிய நியமனங்களில் அவருக்குள்ள பங்குவீதம் கிடைத்துப்போம். அப்புறம் தங்கள் உற்றார் உறமுறையார், அண்டினோர் அடுத்தார் இவர்களுக்கு உத்தியோகம் தேடிக்கொடுப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு வேலையில்லை. மிகவும் நெருங்கிய பந்துவாயிருந்தால் ஸிவில் ஸெர்விஸில் வேலைகொடுத்து இந்தியாவிற்கு ஸிவிலியனுத்தியோகஸ்தர்களைப் பழக்குவதற்காக ஏற்பட்ட ஹெய்லிபரி காலேஜுக்கு அனுப்பிவைப்பதும், தூரத்து பந்துவாயிருந்து அவ்வளவு பாத்தியதை யில்லாதவர்களாயிருந்தால் அவர்களை இராணுவ உத்தியோகத்துக் கனுப்ப உத்தேசித்து அதற்காக அடிஸ்கோம்பிலுள்ள இராணுவப்பயிற்சி பாடசாலைக் கனுப்புவதும் வழக்கமாயிருந்தது. சமீபபந்துவாயிருந்து ஸிவிலியனுத்தியோகத்துக் கனுப்பப்பட்ட வாலிபர் அதற்காகவுள்ள சொற்ப பரீக்ஷையிலும் தேறத்திராணி யற்றவராயிருந்தால் அவர்களுக்குக் குதிரைப் பட்டாளத்தில் தகுந்த வேலைசெய்து கொடுத்துவிடுகிறது வழக்கம். ஸிவில் ஸெர்விஸ் உத்தியோகங்களுக்குப் பின் குதிரைப் பட்டாளத்திலுள்ள உத்தியோகத்துக்கு நல்ல சம்பளம். அதற்கும் அடுத்த படியிலிருப்பது பதாதிப்பட்டாளத்துக்கு நேரில் நியமனம் செய்தனுப்புவது. மிக வேண்டியவர்களாகவின்றி அண்டினோர் அடுத்தார் இவர்களைப் போன்றவர்களை அடிஸ்கோம்ப் இராணுவப் பயிற்சிசாலைக்கு அனுப்புவது வழக்கம். அதில் தேறினவர்கள் தான் பீரங்கிப்பட்டாளத்துக்கும், இராணுவ இஞ்சினீர் வேலைக்கும் நியமிக்கப்படுவது. இந்த உத்தியோகங்களுக்குச் சம்பளம் மட்டாகவிருப்பதன்றி இவற்றில் 'ப்ரொமோஷன்' கிடைப்பதும் வெகு தாமதமாகக் கிடைக்கும். ஸிவில் மிலிடெரி உத்தியோகங்களுக்கு நியமனம் செய்வதற்கு யோக்யதா யோக்யதை யொன்றுமில்லை. டைரெக்டருக்கு வேண்டியவர்களாயிருந்து அவர்களால் பலமாகச் சிபார்சு செய்யப்பட்டால் அதுதான் எல்லா யோக்கியதையும் பொருந்தி

னாற்போலாம். இராணுவத்துக்கு நியமிக்கப்படுகிறவர் வைத்தியர்களால் திடகாத்திர முடையவர்களாவென்று கூடப் பரீக்ஷித்துப் பார்க்கப்படுவதில்லையாம். 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' உத்தியோக நியமனம் செய்து வந்த வைபவத்தில் அவர்களுக்குள் இராணுவ காரியதரிசியாயிருந்தவர் லண்டனை விட்டு வெளியேறாதவரும் சண்டை முகத்தைக் கண்ணால் கண்டறியாதவருமான ஒரு பிரதம குமஸ்தாவாம். இப்படியே மற்றவைகளுமிருக்கும். வீணாய்ச் சொல்லி வளர்த்துவானேன். இந்த 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களுக்கு' இந்தியா துரைத்தனத்தை மேன்பார்வை செய்துவர எவ்விதலாயக்குமில்லை. அவர்கள் வியாபாரம் போனதோடு அவர்களையும் வீட்டுக்கனுப்பியிருப்பதே சரியாயிருக்கும். ஆனால் அவர்கள் வியாபாரத் துறையில் துணிந்து செய்த பெருமுயற்சிகளாலே ஆங்கிலேயருக்கு இந்தியாவில் நாடுநகரங்களும் இராஜ்ஜியங்களும் கிடைத்தபடியால், அதன்பலனை அவர்களனுபவிக்கட்டுமென்று மேலதிகாரஞ் செய்வதை மேலுக்குமட்டும் அவர்களதாகச்செய்து உண்மையில் எல்லாவற்றையும் 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' என்கிற வெளிவேஷப் பேரை வைத்து மந்திராலோசனை சபையைச்சேர்ந்த ஒரு மந்திரிவசமாக ஒப்புவித்துவிட்டு, இந்தியாவிலுள்ள உத்தியோகங்களுக்கு நியமனம் செய்யும் லாபகாமான அதிகாரத்தைமட்டும் அவர்கள் வசம் விட்டுவந்தார்கள். இப்படி சுமார் 75-வருஷம் நடந்துவந்தது. பின்னும் நடந்துவந்திருக்கலாம். 'தன் வினை தன்னைச் சுடும்' என்றபடி அவர்கள் செய்துவந்த அக்கிரமங்கள் அவர்களுக்கே தீங்கு விளைக்க 1857-ம் வருஷத்தில் பெருங் கலகமுண்டாகி அவர்களடியோடு அழிந்து போகும்படிச் செய்துவிட்டது. 1858-ம் வருஷத்தில் இவர்களை யொழித்துவிட்டுச் செய்த ஏற்பாடுதான் அதிசொற்பமாறுபாட்டோடு இன்றுவரையில் நடந்துவருகிறது. இப்பொழுது சீமையிலிருந்து இந்தியாவை யாண்டுவருவதற்காகவுள்ள ஏற்பாட்டை இதன் முதலில் சுருக்கமாகக் குறிப்பிட்டுச் சொன்னோம். இந்த ஏற்பாடு 1858-ம் வருஷத்தில் அமுலுக்கு வந்தது முதல் இதுவரையிலுள்ள அதன் வாலாற்றைப் பின்னொரு சமயம் சஞ்சிகையில் எடுத்துரைப்போம்.

---

## THE NAIGARA FALLS.

### நயகரா நதியின் நீர்வீழ்ச்சி.

சென்ற ஆகஸ்டு மாதச் சஞ்சிகையில் கடவுளின் சிருஷ்டியில் அமைந்திருக்கும் வஸ்துக்களின் பெருமையை ஒருவாறு குறிப்பிட்டு எழுதினோம். இம்முறை அச்சிருஷ்டியில் இப்பூமண்டலத்தில் உள்ள அற்புதக் காட்சிகளில் ஒன்றாயதும் பல பிரதேசங்களிலும் உள்ள நீர்வீழ்ச்சிகளிலும் அதிக பெரியதும், வியக்கத்தக்கதுமான 'நயகரா நதியின் நீர்வீழ்ச்சி' (The Falls of Naigara) யைக் குறித்து எழுதுவோம். (ஒரு நதியின் நீர்வீழ்ச்சியென்பது, அந்நதி உன்னதமான மலை, குன்றுகளிலிருந்தாவது அல்லது உயரமான மேட்டு நிலங்களிலிருந்தாவது பள்ளத்தாக்குகளில் செங்குத்தாய் இழிவதாம்.)

உருண்டைவடிவமுள்ள இந்தப் பூமண்டலத்தின் ஒரு பாதியில் நமது இந்தியா தேசமிருக்கும் ஆசியா கண்டமும், ஐரோப்பா, ஆப்பிரிக்கா கண்டங்களும், மற்றோர் பாதியில் அமெரிக்கா கண்டமும் இருப்பது அனேகருக்குத் தெரிந்திருக்கலாம். நமது கால்களுக்கு



The Niagara Falls.] [நயகர்ரா நதியின் நீர்வீழ்ச்சி.

அடியில் பூமியின் கீழ் பாகத்திலிருக்கும் இந்த அமெரிக்காகண்டத்தின் வடபாகமாகிய வட அமெரிக்காவில் 'ஐக்கிய மாகாணங்கள்' (The United States) என்று வழங்கிவரும் தேசத்தில் ஏரிகள் அதிகமாயுள்ள பிரதேசத்தில் நயக்ரா நதியானது பாய்கின்றது. இந்நதி சமுத்திரமட்டத்திற்குமேல் 573 அடி உயரமாயுள்ள 'ஏரி' (Lake Erie) என்னும் ஏரியினின்றும் பிரிந்து, 30-மைல்தூரம் ஓடி 'அன்டேரியோ' (Lake Ontario) என்னும் ஏரியில் பாய்கிறது. அது ஏரியினின்றும் பிரவாகிக்க ஆரம்பித்ததும் முக்கால் மைல் விஸ்தீரணமுள்ளதாய் முதல் இரண்டு மூன்றுமைல் வரையில் அதிக வேகமாயோடி, இரண்டு பிரிவுகளாகப்பிரிந்து 'கிராண்ட் தீவு' (Grand Island) என்னும் தீவைச்சுற்றிலும் பாய்ந்து, பின்னும், பிணைந்து, பெரிய தடாகத்தையொத்து அதிக விஸ்தீரணமுள்ளதாய் அதன் நீரோட்டம் பரந்து, திரும்பவும் நீர்வீழ்ச்சி யுண்டாகும் இடத்திற்கு சமீபத்தில் திடீரென நதியானது அதிக குறுகலடைந்து ஒரு மயிலளவில் 52-அடி தணிவாய் வெகு தீவிர கதியுடனும் குழப்பத்துடனும் சென்று, உலகத்தில் இத்தகைய காட்சிக்கு இணையாகச் சொல்லற்பாலது வேறில்லையென்று கூறும் வண்ணமாய் அற்புதக் காட்சியையளித்து, பெரியமேட்டு நிலத்தினின்றும் 150-அடி முதல் 164-அடி ஆழமுள்ள பள்ள நிலத்தில் விழுகின்றது. நீர்வீழ்ச்சியுண்டாகும் இடத்தில் நதியின் அகலம் 4,750-அடி; இதன் மத்தியில் 1,000-அடி அகலமும் தண்ணீர் மட்டத்திற்குமேல் 40-அடி உயரமுமுள்ள 'கோட் தீவு' (Goat Island) என்னும் சிறிய தீவு இருக்கிறது. இந்தத் தீவிற்கு வலதுபுறத்தில் 164-அடி உயரமுள்ள வீழ்ச்சிக்கு 'அமெ

ரிக்கன் வீழ்ச்சி' (American Fall) யென்றும், இடதுபுறத்தில் 150-அடி உயரமுள்ள வீழ்ச்சிக்கு, அது குதிரைலாடத்தையொத்த வளைவாய் வளைந்திருப்பதால், 'குதிரைலாடவீழ்ச்சி' (Horse-shoe Fall) யென்றும் பெயர். நயகரா நதியினின்றும் சற்றேறக்குறைய ஒரு கோடியே எண்பதுலக்ஷம் கன அடி அளவுள்ள தண்ணீர், வீழ்ச்சியின் வழியாய் 1,000-அடி அகலமும் 300-அடி ஆழமுமுள்ள ஆழியையொத்த பாதாளத்தில் வெகு குழப்பத்துடன் நுரைத்துக்கொண்டு விழுந்து, இருபுறமும் 200-அடி முதல் 350-அடி வரையில் உயரமுள்ள செங்குத்தான கரைகளமைந்த பள்ளத்தாக்கில் அதிவேகத்துடன் ஓடுகின்றது. நீர்வீழ்ச்சியுண்டாகும் செங்குத்தான இடத்தின் விளிம்புகள் கடினமான சுண்ணும்புக் கற்படைகளால் அமைந்திருக்கிறது; நுரைத்துக்கொண்டு விழும் ஜலத்தின் வேகத்தின் காரணத்தால், சாமானிய கடினமுள்ள பாறைப்படைகளில் குகைகள்போன்ற குழிகள் உண்டாயிருக்கின்றன.

### நயகரா நீர்வீழ்ச்சியால் உண்டாகும் அற்புதக் காட்சிச்சிறப்பு.

நயகரா என்னும் பதத்திற்கு 'தண்ணீரின் இடிமுழக்கம்' என்று அர்த்தம்; இந்தப் பெயர் அமெரிக்கா தேசத்துப் பூர்விகக் குடிகளாகிய 'சிவப்பு இந்தியர்' (Red Indians) களால் இடப்பட்டதாகத் தெரியவருகிறது. தங்கள் பிரதேசத்தில் இருக்கும் அதிசயக் காட்சியின் அருமையும் பெருமையும் உணர்ந்தே அவர்கள் அந்நதிக்கு அப்பெயரினையிட்டனர்போலும். அமெரிக்காதேசத்தில் யாத்திரை செய்யும் யாத்திரீகர்கள் இந்நீர்வீழ்ச்சியின் விநோதக்காட்சியைக் கண்டு களிக்காமற்போவதில்லை. நமது சென்னை நகர் வாசியாகிய காலஞ்சென்ற மிஸ்டர் எஸ். சத்தியநாதன் அமெரிக்காவுக்குப் போயிருந்தபொழுது அவர் நயகரா நீர்வீழ்ச்சியைக் கண்டடைந்த ஆனந்தானுபவத்தையும், அக்காட்சியின் சிறப்பையும் குறித்து விஸ்தாரமாய் வருணித்து எழுதியிருக்கிறார்.

நீர்வீழ்ச்சியின் சுற்றுப்பக்கங்களில் தோன்றும் காட்சி வெகு ரமணீயமாயிருக்கும். ஆங்காங்கே ஓங்கி வளர்ந்து நிற்கும் மரங்களும், மேடுபள்ளமுமாயிருக்கிற அவ்விடங்களில் நிழலளிக்கும் செடிகொடிகளடர்ந்திருக்கும் உத்தியானவனங்களும், பாறைகள் நிறைந்த வெளியிடங்களும், இவைகளினடுவே வெகு உக்கிரத்துடனும், வேகத்துடனும் வெள்ளை வெளேலென்று நுரைத்துக்கொண்டு நாற்புறமும் நீர்த்திவலைகள் சிதறி மேகப்படலங்களையொத்து மேலே கிளம்பும்படியாயும், சூரிய வெளிச்சத்தில் பலவித வர்ணங்களுடன் பிரகாசித்துக்கொண்டும் நயகராநதியின் தண்ணீர் உயரமான பாறைப்படைகளில் விழுந்து மோதி அடித்துப் புறண்டோடுங் கோலமாகிய காட்சியும், அவைகளைக்கண்ணுறும் யாவர் மனத்தையும் கவர்ந்து களிப்புண்டாக்கும். இவ்வரிய காட்சியைப் பார்க்க வருபவர் யாவரும், நீர்வீழ்ச்சியின் சமீபத்தில் வந்து நின்றவுடன் தங்கள் முன்னர் தோன்றும் தோற்றத்தின் சிறப்பைக்கண்டு, தாங்கள் பார்ப்பது நிஜமான காட்சிதானோ, அல்லது கனவிற்காணும் வெளித்தோற்றந்தானோவென, ஐயமுற்றுத் திகைத்து நின்றவிடத்தைவிட்டு நிலைபெயராமல் ஸ்தம்பிதமாய் மெய்மறந்து நின்றுபோகிறார்கள். நயகரா நதியின் தண்ணீரானது வீழ்ச்சியின் சமீபத்திற்கு வரவர அலைகளாய் மாறி, கட்குடியர்கள் வெறியால் ஒருவரையொருவர் தாக்கி மோதி பேரிரைச்சலிட்டு மண்டைகளுடைபட்டு, காயங்களடைந்து திண்டாடும் காட்சிபோல், ஆங்காங்கே தண்ணீர் மட்டத்தில் கிடக்கும் பாறைகளின் தடையால் தடைப்பட்டு நிலைகுலைந்து வரும்போது, தண்ணீருக்கு மேலாகத் தலை நிமிர்

ந்து நிற்கும் பாறைகளில் மோதி, வெறிகொண்டாற்போலுமாறி, குழப்பங்கொண்டு வீழ்ச்சியின் விளிம்புகளிலுள்ள கரடுமுரடான பாறைகளில் அடிபட்டுச் சிதறுண்டு, பெரும் கடாரத்தில் அதிக சூட்டினால் தளதளவென்று மேலே கிளம்பிக் கொதித்துக்கொண்டிருக்கும் திரவம்போன்றும் கொந்தளித்துக்கொண்டிருக்கும் பாதாள வாழியில் நுரைத்து விழுந்துகொண்டிருக்கும். இம்மாதிரியாக பாறைகள் விசேஷமாய் நிறைந்துள்ள பாதாளத்தில் அருவிநீர் விழுந்து, அவ்விடத்தில் முன்னரே வந்து நிறைந்திருக்கும் தண்ணீரில் தாக்கவே, புதுஜலத்தின் வேகத்தைத் தாளமாட்டாமல் தங்கிநின்ற தண்ணீர் நாற்புறமும் வீசப்பட்டு, வரை வரையாய் மேலே கிளம்பி விழும் காட்சி வெகு விந்தையான தோற்றமாயிருக்கும். இவ்வருமையான காட்சியைப் பின்னும் அதிக அழகுண்டாக்க வேற்பட்டனவோ வென வியக்குமாறு, நீர்வீழும் பள்ளத்தாக்கின் இருபுறத்தினின்றும், அவ்விடத்தில் வானமெங்கும் பரந்துநிற்கும் அணுப்பிரமாணமுள்ள நீர்த்துளிப் படலங்களில் சூரிய ரஸ்மி தாக்கும் காரணத்தால், வான விற்கள் தோன்றி மனோரம்மியமாய் ஏழுவகை வர்ணங்களோடும் பிரகாசிக்கும். நீர்த்துளிமேகங்கள் வானமெங்கும் ஓங்கி நிற்க, வானவிற்களும் அழகுடன் பிரகாசிக்க, நீர்வீழ்ச்சியின் அரவமோ இடியையொத்து கர்ச்சிக்க, கார்காலக் கடுமழைதான் வருஷிக்கத்துவக்குகின்றதோ வென மயங்கச்செய்யும். இந்த நீர்வீழ்ச்சியைப் பார்க்கப்பார்க்க ஒவ்வொரு நிமிஷமும் அதிக ஆச்சரியமும் மனக்களிப்பும் உண்டாய் அந்த விடத்தை விட்டுப்போகக் கொஞ்சமேனும் மனம் வராதென்று, அவ்விடம்போய்வந்த யாத்திரிகர்கள் சொல்லியிருக்கிறார்கள். நமது சென்னை இராஜதானியில், திருநெல்வேலி ஜில்லாவில் குற்றாலம், பாபவிநாசம் என்னுமிடங்களின் நீர்வீழ்ச்சிகளும், கோயமுத்தூர் ஜில்லாவில் சிவன்சமுத்திரம் நீர்வீழ்ச்சியும், வெகு நேர்த்தியான காட்சிகளமைந்தவை யென்று அனேகர் கேட்டும், நேராகப் பார்த்தும் அறிந்திருக்கலாம். ஆயினும், இவைகளில் யாதொன்றையும் கொஞ்சமேனும் நயகரா நதியின் நீர்வீழ்ச்சிக்கு இணையாகச்சொல்லப் புகுவது யானையையும் சிற்றெறும்பையும் இணையாக ஒப்பிடுவதையொக்கும்.

இவ்வருவிநீர் பாய்ந்து விழும் காட்சியை இச்சஞ்சிகையின் 213-வது பக்கத்தில் படமாகச் சித்திரித்துக் காட்டியிருக்கிறது. படத்தின் வலதுபுறத்தில் வழிந்தோடுவதாகக் காணப்படுவதே குதிரை லாட வீழ்ச்சி; இடதுபுறங் காணுவது அமெரிக்கன் அருவி. இவைகளிரண்டிற்கும் மத்தியில் மரங்களாலும் செடிகொடிகளாலும் அடர்ந்திருப்பதாகக் காண்பதே 'கோட்' தீவு (Goat Island.) அதிக உக்கிரத்துடன் பாய்ந்து விழுந்தோடும் தண்ணீர் நுரைத்துக் கொந்தளிப்பதையும், சிதறுண்ட நீர்த்துளிக் கூட்டங்கள் ஆவியையொத்து மேலே கிளம்பி, மூடுபனியைப்போல் ஆகாயத்தைக் கவிந்து நிற்பதையும், சிற்சில நீர்வாழும் புள்ளினங்கள் கொந்தளிப்பில் அகப்பட்டுத் திண்டாடும் மீன்களை இரைகொள்ளும் பொருட்டு தண்ணீருக்கு மேலாகப் பறந்தோடுவதையும், நீர்வீழ்ச்சியின் முன்புறமாய்த்தோன்றும் காட்சியைக் கண்டு களிக்கச் சிலர் நீராவி மரக்கலமேறி அருவியை எதிர் நோக்கிச் செல்வதையும், படத்திற்காணலாம். இக்காட்சிகளை நேரிற் கண்ணுற்றவர்கள் அவைகளை வாய்மொழியால் விவரித்துரைக்க வாய்க்காதெனில், அக்காக்ஷிகளை சித்திரத்தினாலும் குறிப்பிக்கவொண்ணாதென்பதற்கு ஐயமுண்டோ. அவ்விடத்தில் நீர்ப்பெருக்கினால் உண்டாகும் பேரிடி முழக்கம்போன்ற கர்ச்சனையை, சித்திரமென்னை சிற்பித்துக் காட்டவல்லதோ? துல்லிய வெண்ணிறத்துடன் நுரைத்தெழும் தண்ணீர்க் குழப்பத்தில் சூரிய வொளி பிரதிபலிக்க உண்டாகும் தேஜோமய வெண்ணிறத்தையும், நீர்த்துளிப் படலங்கள் சூரிய கிரணங்களால் பலவர்ணங்கள் பூண்டு வெகு விந்தையாய்ப் பிரகாசிக்கும் கோலங்களையும்,

நமது வர்ணவகைகளென்ன தீட்டவல்லன வோ? நிமிஷத்துக்கு நிமிஷம் புதுமை புதுமை யான தோற்றங்களை உண்டுபண்ணும் இவ்வற் புதக் காட்சியைச் சித்திரம்தான் எப்படி சித் திரித்துக் காட்டக்கூடும்! காட்டிடினும், அது அவ்விடத்திற்காணும் நிஜத்தோற்றத்திற் குக் கொஞ்சமேனும் நிகராகாது. கண்ணா ப்பார்த்து அனுபவித்தலே அனுபவமாகும்.

நயகரா நதியின்வேகத்தால் யந்திரங்களையியற் றச்செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடு.

நயகரா நதியின் காட்சிச் சிறப்பை ஒரு வாறு சொன்னோம். அந்நதி அதிகவேக மாய்ப் புரண்டோடும் வேகத்தைக் கொண்டு மின்சாரமியற்றப்பட்டு, கைத்தொழில்களுக்கு உபயோகமாவதைக்குறித்து எழுதுவோம். ஆதிகாலத்தில் கஷ்டசாத்தியமான யாதொரு காரியமும் மனிதனுடைய தேகவலிமையினு லும், குதிரை, எருது, யானை முதலிய மிருகங் களின் உதவியாலும், செய்யப்பட்டு வந்தது. பிற்பாடு கொஞ்சகாலத்திற்கு முன்னர் கண்டு பிடிக்கப் பட்டதாகிய நீராவியின் வலிமையால், மானிடர் பலர் ஒன்று கூடிச்செய்தற்குமரிதா கிய பல கஷ்டமான காரியங்களும் இலகுவில் செய்யப்பட்டுவருகின்றன. முப்பது, முப்பத் தைந்து பெரிய வண்டிகள் ஒன்றாய்ப் பிணைக் கப்பட்டு அதிக பாரமேற்றப்பட்டும், வெகு சுலபமாயும் அதி தீவிர கதியுடனும் ஓடுவதும், அனேகம் பஞ்சாலைகளிலும், நூல் புடைவை முதலியவை நூற்கப்படும் யந்திரசாலைகளிலும், உலோகங்கள் உருக்கப்பட்டு அனேகவிதமான பாண்ட ரூபங்களாக அமைக்கப்படும் உலைக் கூடங்களிலும், இன்னும் மற்றும் வேறுவிதங்க ளான தொழிற்சாலைகளிலும், மானிடர் தேகப் பிரயாசையை விசேஷமாயொழித்து, சுலப மாய் காரிய சாதகங்களை யாக்குவதற்கு அனு கூலமாயிருப்பதும், நீராவியின் வலிமையா லென்பது யாவருக்கும் தெரிந்த விஷயம். அத ற்குப்பின்னர், மின்சாரத்தின் வேகத்தைப் பிரயோகிக்கச் சில உபாயங்கள் கண்டுபிடிக் கப்பட்டு, நீராவியின் உதவியால் செய்யப்படும் பல அருமையான காரியங்களையும் மின்சாரத் தால் செய்து முடிக்கக் கூடியதாயிருக்கிறது. (மின்சாரமென்பது மழைக்காலத்தில் உண் டாகும் இடிமுழக்கங்களுக்கு முன்னதாகக் காணப்படும் மின்னலொளியை ஒத்தது.) தந் திகளின் வழியாய் செலுத்தப்படும் மின்சாரத் தின் வலிமையினால் நாம் ஒரு இடத்திலிரு ந்து மற்றோரிடத்திற்கு அனுப்பவேண்டிய சமாசாரங்களை, அங்கங்கே ஸ்தாபிக்கப்பட் டிருக்கும் கடிகாரங்கள்போன்ற பெட்டிகளி லிருக்கும் முட்கள் ஆடுவதால், மற்றோர் அதிக காலதாமதமின்றிச் சுலபமாய், சில குறிப்புகளைக்கொண்டு அறிந்துகொள்வதற்கு அனுகூலமாயிருக்கிறது. மேலும் நமது செ ன்னை நகரில் சில முக்கியமான தெருக்களில் நெருப்பின்றியும், நீராவியின்றியும், வேகமாய் ஓடிக்கொண்டிருக்கும் 'டிராம் வண்டிகள்' Tram Cars)மின்சாரத்தின் வேகத்தால் இழுக் கப்படுகின்றனவென்று யாவரும் அறிவார்கள், 'பவர் ஸ்டேஷன்' (Power Station) என் னும் பிரதான யந்திரசாலையில் நீராவி யந்தி ரங்களின் வலிமையால் சில பெரிய சக்கிரங் களைச் சுழற்றுவித்து, அவைகளின் உதவி யைக்கொண்டு சில யந்திரோபாயத்தால் மின் சாரமியற்றுவித்து, அதை டிராம்வண்டிக ளோடும் தெருக்கள்தோறும் தோரணமிட் டதுபோல நாட்டியிருக்கும் செப்புக்கம்பி களிற் பாய்ச்சி அவ்வேகத்தை வண்டிகளுடன் பிணைத்து ஓட்டுவிக்கும் விஷயம் சென்னை நகர்வாசிகள் பலரும் அறிந்ததே.

நீராவியின் உதவியால் மின்சாரமியற்றுவது, ஆவியுண்டாக்குவதற்கு அத்தியாவசியமான நிலக்கரி, விறகு முதலியவைகளினால் அதிக பணச்செலவு பிடிக்கக்கூடியது. ஆயினும், இதுகாறும் கண்ணுக்கினிய அற்புதக்காட்சி யொன்றையே யளிப்பதாய் விளங்கிய நயகரா நதியின் கரடுமுரடான தரையில் அலைகளெடு த்து, வெகு உக்கிரத்துடனும் வேகத்துடனும் பிரவாகித்துக்கொண்டிருக்கும் நீர்ப்பெருக் கின் வேகத்தைக்கொண்டு, நீராவியாலுற்ப விக்கும் வேகத்திற்கிணையான சக்தியையுண்டு

பண்ணி அச்சக்தியினின்றும் மின்சாரமியற்ற ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். இதற்காக நயகரா நதியின் நீர்வீழ்ச்சிக்குக் கொஞ்சதூரம் மேலாக அந்நதியினின்றும் ஓர் வாய்க்கால் வெட்டப்பட்டிருக்கிறது. இந்த வாய்க்காலில் அனேக மதகுகள் உண்டு. இவைகளின் வழியாய்ப் பாயும் ஜலம், அவ்விடங்களில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் அதிக உந்நதமும், நெட்டுக்குத்தாயுமுள்ள பென்னம் பெரிய உருக்குக் குழல்கள் வாயிலாக 7-அடி குறுக்களவும், 140-அடி உயரமுமுள்ள ஜலஸ்தம்பங்களை யொத்து, கீழே அமைக்கப்பட்டிருக்கும் படுகுழிகளில் நாட்டியிருக்கும் பெரிய வெண்கலச் சக்கிரங்களின்பேரில் அதிக வேகத்துடன்தாக்கி, அவைகளைத் தீவிர கதியுடன் சுழலவிடச்செய்து, குழிகளின் மட்டத்திற்குக் கீழாக சமீபத்தில் உண்டாக்கப்பட்டிருக்கும் சுரங்கக்கால்வாயிற்பாய்ந்து திரும்பவும் நயகரா நதியில் விழுகின்றது. இச்சுரங்க வாய்க்கால் தரைமட்டத்திற்கு 200-அடி கீழாகக் கடினமான கருங்கற்பாறை நிலத்தில் குடையப்பட்டு சுமார் 7,000 அடி நீளமும், 21-அடி உயரமும் 14-அடி அகலமுமுள்ளது, மேற்சொல்லிய குழிகளில் நாட்டப்பட்டிருக்கும் பெருஞ் சக்கிரங்களுக்கும், தரைமட்டத்திற்குமேல் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் யந்திரசாலைகளில் அமைந்துள்ள யந்திரங்களுக்கும், நீளமான உருக்குச் சட்டங்களால் சம்பந்தமுண்டாக்கியிருக்கிறபடியால், அச்சக்கிரங்கள் சுழலமிடுவதாலுண்டாகும் வேகமானது மேலே இருக்கும் யந்திரங்களைச் சுற்றச்செய்கிறது; இப்படிச் சுற்றும் யந்திரங்களைக்கொண்டு அவ்விடத்தில் வைக்கப்பட்டிருக்கும் யந்திர சூக்ஷமங்களால் மின்சாரவேகம் விசேஷமாய் இயற்றப்படுகிறது. இவ்விடத்தில் நாட்டப்பட்டிருக்கும் மின்சாரமியற்றும் யந்திரங்கள் ஒவ்வொன்றும் 5,000 குதிரைகள் சேர்ந்து உண்டாக்கக்கூடும் வேகத்தை உற்பத்தி செய்யவல்லனவாம். இப்போது செய்திருக்கும் ஏற்பாடுகளைக்கொண்டு 1,20,000 குதிரைகளால் உண்டுபண்ணக்கூடிய வேகத்தை உற்பத்தி செய்யப்போதுமான யந்திரங்களை ஸ்தாபிக்க வகையிருப்பதாக ஊகிக்கப்படுகிறது. இந்த வேலை 5-வருஷகாலமாய்ச் செய்யப்பட்டு வந்து 1895-ம் வருஷம் முடிவுபெற்றது; இதற்குச்செலவான தொகை 30,00,000, அமெரிக்கன் 'டாலர்' (Dollar). (ஒரு டாலர் ஏறக்குறைய ஒரு வராகனுக்குச் சமமானது.) வேலைகள் முடிந்த பிறகு இப்போது அவ்விடத்தில் உண்டாகும் மின்சாரவேகத்தைச் செப்புக்கம்பி வடங்களால் பக்கத்திலிருக்கும் தொழிற்சாலைகளுக்குச் செலுத்துவித்து, சுலபமாய் வேலைகள் நடத்திவர ஆரம்பித்திருக்கிறார்கள். மேலும் இவ்விடத்திலுண்டாகும் மின்சாரத்தின் வேகத்தைக்கொண்டு சுற்று மாகாணங்களாகிய 'பென்ஸில்வேனியா' (Pennsylvania), 'ஒகியோ' (Ohio), 'மிசிகான்' (Michigan) முதலியவற்றிலுள்ள வியாபார ஸ்தலங்களுக்கும், ஐக்கிய மாகாணங்களின் தலைமை நகராகிய 'நியூ யார்க்' (New York) பட்டணத்திற்கும், தெருக்கள் தோறும் தீபமேற்றப்படுவதற்கும், மற்றும் சமீபப் பிரதேசங்களிலுள்ள கைத்தொழிற்சாலைகளிலுள்ள யந்திரங்களையோட்டுவிப்பதற்கும் சாத்தியமாகுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. இது மாதிரியாகவே மதுரை ஜில்லாவில் சமீபகாலத்தில் கட்டிமுடிந்த பெரியாற்றுப் பாசனவேலைப் பிரதேசத்தில் உண்டாகும் நீர் வேகத்தைக்கொண்டு யந்திரங்களை ஓடச்செய்து மின்சாரமியற்றுவித்து, அதைக்கொண்டு பெரிய தொழிற்சாலைகளில் யந்திரங்களை யோடச் செய்வதும், மதுரை, திருச்சினாபள்ளி, சென்னப்பட்டணம் முதலிய பெரிய பட்டணங்களில் தீபமேற்றுவதும் சாத்தியமாகுமென்று, 'லந்தன்' (London) நகரத்திலுள்ள மின்சார சாஸ்திர நிபுணர்கள் சிலர் சொல்லியிருப்பதை அனேகர் கேட்டிருக்கலாம். மைசூரிலும் பம்பாயிலும் இப்படியே செய்திருக்கிறார்கள்.

இவ்வாறாக, நுரைத்துக்கொண்டு நீர்ப்புகை எழும்ப அதிவேகமாயோடும் நயகராநதியின் வேகமானது மின்னலையொத்த மின்சாரவேகமாக்கப்பட்டு பலவித சுகசாதகங்களையுண்டாக்குவதாயிருக்கிறது. பார்வைக்கு மிகவும் இனிய காட்சிகளையமைத்து, கடவுளின் பெருமையை விளக்குவதாகிய இவ்வருவியின் வேகத்தினால் உண்டாகக்கூடும் பிரயோஜனங்களை உணர்ந்து, தக்க சாதகங்களால் அதன் வலிமையைக் கைக்கொண்டு, பலவிதத்தொழில்கள் ஓங்கிவளரவும் அவைகளினிறுதியால் அனேகர் ஊதியம்பெற்றுப் பிழைக்கவும் கூடினதான வேலைகளைச்செய்து முடிக்கத்தேவையான புத்தி யுக்தி சாமர்த்தியங்களை கருணாநிதியாகிய கடவுள் மனிதர்களாகிய நமக்குக் கொடுத்திருப்பதை நினைத்து நாமெல்லோரும் அவரிடம் அழியா அன்புவைத்து வாழவேண்டும்.

## BIOGRAPHICAL SKETCHES III.
## MEERABAI THE DEVOUT RANI OF CHITTOOR.
### சரித்திரமஞ்சரி—3.

### மிராபாய் என்னும் புண்ணியவதியின் சரித்திரம்.

'பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேராதார்.'—குறள்.

### III.

மிராபாய் பிருந்தாவனத்திற்கு வந்ததும் அங்குள்ள தேவாலயங்கட்குச் சென்று கடவுளைத் துதித்தும் மற்றோர்களையும் கடவுளை வழிபடும்படி வேண்டிக்கொண்டும், பக்திசெய்துவந்தாள். இவளுக்கு அங்குள்ள தேவாலயங்களே வாசஸ்தலமாயிற்று. பலவிடங்களிலிருந்தும் இவளைப்பார்க்க வரப்பட்டவர்களுக்கெல்லாம், பிறவித்துன்பமாகிய கடலைத்தாண்டிச் செல்லத் தகுந்த மரக்கலம் கடவுளிடத்து மெய்யன்புகொண்டு அவரை வழிபடுதலே யென்று சொல்வாள்.

'மின்னனைய பொய்யுடலை நிலையென்று மையிலகு
விழிகொண்டு மையல் பூட்டு
மின்னார்களின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்,
பொன்னையழியாது வளர் பொருளென்று போற்றியிப்
பொய்வேஷ மிகுதிகாட்டிப்
பொறையறிவுதுறவீதலாதி நற்குணமெலாம்
போக்கிலே போகவிட்டு'

மெய்ப்பொருளாகிய கடவுளை வழிபடாதார்க்கு முத்தியையளிக்கும் பேரின்ப வீடு கிட்டாதென்று சொல்வாள்.

'கல்லாத வறிவுமேற் கேளாதகேள்வியுங் கருணை சிறிதேதுமில்லாக், காட்சியுங் கொலைகளவு கட்காம மாட்சியாய்க் காதலித்திடு நெஞ்சமும், பொல்லாத பொய்மொழியு மல்லாதுநன்மைகள் பொருந்துகுணம்'—

ஏதுமறியாமல் காலத்தைக் கழித்தால், கடவுளின் அருளைப்பெற வாய்க்காதென்று மிரா அடிக்கடி போதிப்பாள்.

'எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவி தான் இயாதினுமரிதரிதுகாண், இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ஏது வருமோ' வென்றும், 'இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பரென்றெண்ணவோ திடமில்லையே' யென்றும், ஆதலால் 'இந்திரசாலம், கனவு, கானலினீரென'க்காணும் இந்த அநித்தியமான உலக வாழ்க்கையைப் பற்றறக்களைந்து, 'செப்பரிய முத்தியாங் கரைசேர' வழியைக்கண்டுகொள்ளுங்களென்று அடிக்கடி பகருவாள் மிராபாய்.

மனிதர்கள் தண்ணீரிலிருப்பதனாலேயே அவர்களுக்கு மோக்ஷங்கிடைக்குமானால், நீரில் வாழும் எல்லா ஜெந்துக்களுக்கும் சுலபமாய் மோக்ஷங் கிடைக்கவேண்டுமே; கந்தமூலபலாதிகளைத் தின்று ஜீவித்திருப்பதால் பேரின்ப வீடுண்டானால் அவைகளைத் தின்று வாழும் குரங்கு முதலிய மிருகங்களுக்கும் கிளி முதலிய பக்ஷிகளுக்கும் கிட்டவேண்டுமே; புல் பூண்டுகளைத்தின்று வாழ்வதால் முக்தியுண்டானால், அவைகளைத் தின்னும் மான்களுக்கும் ஆடுமாடுகளுக்கும் மோக்ஷமுண்டாக வேண்டுமே; பெண்டிரைத் துறந்து வாழ்வதினாலேயே மோக்ஷபதவி யுண்டென்றால், பெண்டிராசை யொழிந்த பேடியர்களுக்கும் மோக்ஷலாபமுண்டாகவேண்டுமே யென்றும்; கடவுளிடத்து மெய்யன்புகொண்டு நன்னெறி சார்ந்து அவரை வழிப்பட்டாலன்றி மனிதர்களுக்கு சாசுவத முத்தியைப் பெற முடியாதென்றும், மிரா பலகாலும் சொல்வாள்.

'பத்திநெறி நிலைநின்று நவகண்ட பூமிப்பரப்பை வலமாக வந்தும், பரவையிடை மூழ்கியு நதிகளிடை மூழ்கியும் பசிதாகமின்றி யெழுநாமத்தியிடை நின்று முதிர்சருகு புனல்வாயுவினை வன்பசிதனக்கடைத்து, மௌனத்திருந்து முயர்மலைநுழைவு புக்கியுமன்னுதச நாடிமுற்றுஞ், சுத்திசெய்தும் மூலப்ராணனேடேங்கி யைச் சோமவட்டத்தடைத்துஞ், சொல்லரிய வமு துண்டு மற்பவுடல் கற்பகடோறு நிலைநிற்க வீறு, சித்திசெய்தும் ஞானமலது கதிகூடுமோ'

என்று, நமது தமிழ் நாட்டிலவதரித்த பிரம் மாநுபூதிச்செல்வராகிய தாயுமான ஸ்வாமிக ளும் இனிது பாடியிருக்கின்றனரல்லவோ.

துறவறம் பூண்டு நிற்பதைக் காட்டிலும், மனிதர்கள் தங்களுடைய மனைவி மக்களுட னில்லறத்திலிருந்துகொண்டே இல்லறமுறை வழுவாது நடந்து எக்காலத்திலும் இடை விடாது கடவுளிடத்து அன்புகொண்டு, தரு மநெறியில் நின்று வாழ்வார்களானால் அதுவே மேலானதென்றும், அவ்வாறு இல்லறம் நடத் துபவர்கள் துறவிகளினும் மேலான துறவிக ளாவார்களென்றும் மீரா ஞானமுறைப்பாள். இதற்கிணங்க திருவள்ளுவரும் சொல்லியிருக்கி றாரல்லவோ.

'அறத்தாற்றினில் வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற் போஒய்ப் பெறுவ தெவன்.'

'இயல்பினால் வாழ்க்கை வாழ்பவ னென்பான் முயல்வாரு ளெல்லாந் தலை.'

ஒருவன் இல்வாழ்க்கையைத் தருமவழியாக நடத்துவானாகில், துறவறத்திற்போய்ப் பெ றும் பயனென்ன ; தருமவியல்போடு இல்லறத் தில் வாழ்பவன் தவஞ்செய்வாரெல்லாருள்ளும் தலைவனாவான் என்பதாம்.

இவ்வாறு மீராபாய் செய்துவந்த ஞானோப தேசங்களால், பாபத்தொழில்களையே செய்து வந்தவனேகர் துஷ்ட கருமங்களையொழித்து சன்மார்க்க நெறிசார்ந்து தங்கள் ஜன்மங்களைச் சாபல்லியமாக்கிக்கொண்டார்கள். தாங்கள் வெகு பாடுபட்டுத் தேடித் தருமவழியில் ஈயா மல் குவித்துவைத்திருந்த பெருஞ்செல்வத் தையே எல்லாம்வல்ல கடவுளென்று மதித் துப் பூஜித்துவந்த லோபியரனேகர், தங்கள் செல்வத்தை வறியோருக்குக் கொடுத்துதவு தல் முதலிய தரும வழிகளில் செலவிட்டு கிருதார்த்தர்களானார்கள். நாஸ்திக மதங் கொண்டு அஞ்ஞானத்திலாழ்ந்துகிடந்த சில் லோர், ஆஸ்திகம் பூண்டு மெஞ்ஞான மடைந் தனர். தங்கள் பெற்றோர்களையிகழ்ந்து நிந்தி த்து வந்த வாலிபரனேகர், அவர்களை இவ்வுல கிற்காணும் தெய்வங்களென மதிக்கத்துவக் கினார்கள். தங்கள் கொழுநர்களைக் கடிந்து வந்த சிறுக்கியர் சில்லோர் இல்லறமுறை தழுவி வாழத் துவக்கினர்; கற்பிற் சிறந்த தங் கள் மனைவியர்களைக்கழித்து பாபத்தொழில் புரியும் பரத்தையரை நாடி, அவர்கள் வீடே முக்தியென்று கிடந்துழன்று வந்த காமுகர் பலர், அறநெறிசார்ந்து தங்கள் இல்லம் போந்து துக்கசாகரத்தில் ஆழ்ந்துகிடக்கும் தங்கள் பெண்டிரைத் தேற்றினர். மீராபாயின் தீவிர ஞான பரிபக்குவமும், அவள் செய்துவ ந்த ஞானோபதேசமுமே நாடெங்கும் பேச்சா யிருக்க, அவள்கணவனாகிய கும்பசிம்ஹன் தான் செய்த அடாத செயலைக்குறித்துப் பல காலும் வருந்துவான். அவன் சித்தூரில் சென்ற பக்கமெல்லாம் மீராபாயைக்குறித்த சம்பாஷணையும், அவளியற்றிய பாடல்களுமே யாவர் மனத்தையும் கவர்ந்திருக்கக் கண் டான். உலகவாழ்க்கைக்கு உரித்தாகிய தனது அற்பமான இராஜபதவியைக் குறித்தும், அவ னது மனைவி யாவரன்பிற்கும் பாத்திரமுள்ள தான மேலான பதவியை அடைந்திருப்பதைக் குறித்தும் அவன் நினைக்குந்தோறும், தான் அவளுக்கு விளைவித்த கொடுந்தீத்தொழிலால் உண்டான பாபத்தை எவ்வாறு போக்குவ தென்று கரைந்துருகிக் கண்ணீர் பெருக்கு வான். ஐயோ பாவம் ; ஆக்பர் அரசன் மீரா வைத்தொட்டு மாணிக்கமாலையைக்கொடுத்த தனால் தனது இராஜகுலத்திற்கு ஈனம் வந்த தாகத் தன் நாட்டு ஜனங்கள் சொல்வார்களோ

வென்று அப்பேதையரசன் நடுங்கி அவளை ஊரைவிட்டு ஓட்டவும் கொல்லவும் துணிந்தான்! மிரா தனது குலத்திற்கு அவமானத்தை விளைவித்ததாக நினைத்த அவ்வரசன், இப்போது அவள் மீவார் வம்சத்திற்கு ஒரு தாரகமாய் விளங்குவதையுணர்ந்தான்! உலகெல்லாம் ஏத்திப்புகழும் அப்புண்ணியவதியாகிய இராணியை அரசன் சித்தூரில் தனது அரண்மனைக்குக் கூட்டிக்கொண்டுவராமல் மௌனமாயிருத்தலை ஜனங்கள் கண்டு அவனைப் பலவாறாக இகழத் துவக்கினார்கள்.

ஆகவே அரசன் தான் செய்ததைக் குறித்து துன்புற்றவனாய் மிராவைத் திரும்பவும் சித்தூருக்குக் கூட்டிக்கொண்டு வருவதற்காக மாறுவேடங்கொண்டு, கால்நடையாகவே பிரயாணப்பட்டு பிருந்தாவனம் வந்து சேர்ந்தான். வந்ததும் அங்குள்ள ஒரு கோவிலினுட்சென்று மிராவை அரசன் தேடுகையில், அங்கே அவள் ஒரு படியின்மீது தனியே உட்கார்ந்து கொண்டு,

'அரும்பொனே மணியே யெனன்பேயெனன்பான
அறிவே யெனறிவிலூறும்
ஆநந்தவெள்ளமே'

என்றும்,

'அருள்பழுத்த பழச்சுவையே கரும்பே தேனே
ஆரமிர்தே யென் கண்ணே யரியவான
பொருளனைத்துந் தரும்பொருளே கருணை நீங்காப்
பூரணமாய் நின்றவொன்றே புனிதவாழ்வே

என்றும்,

'சிந்தாகுலத்திமிர மகலவருபானுவே தீனனேன் கரையேறவே, கங்கற்ற பேராசை வெள்ளத்தின் வளரருட் ககன வட்டக் கப்பலே'

என்றும்,

'விண்ணாதி பூதமெலாந் தன்னகத்திலடக்கி வெறு வெளியாய் ஞானக், கண்ணாரக் கண்டவன்பர் கண்ணூடே யாநந்தக் கடலாய், வேறொன்றெண்ணாதபடிக் கிரங்கித் தானாகச் செய்தருளும் இறையே'

என்றும், இதுபோன்ற கடவுளின் பெருமைக் குணங்களை யுணர்த்துவனவாகிய பல பாடல்களை,

'உடல் குழைய வென்பலா நெக்குருக விழிநீர்கள் ஊற்றென வெதும்பியூற்ற, ஊசிக்காந்தத்தினைக் கண்டணுகல் போலவே ஒருறவுமுன்னி யுன்னிப் படபடெனநெஞ்சம் பதைத்துண்ணடுக்குற'

கடவுளைத் துதித்துப் பாடிக்கொண்டு மிரா பரவசமாய் உட்கார்ந்துகொண்டிருப்பதை அரசன் கண்டான். அது கண்டதும் அரசன் மிராவை நோக்கி, பெண்மணியே நீ எனக்கு ஏதாவது பிச்சை (பிக்ஷை) தரவேண்டுமென்று இரந்து வேண்டினன். நானோ மிகவும் ஏழை: செல்வவான்கள் யாரிடத்திலாவது நீபோய் யாசித்தால் அவர்கள் உனக்கு ஏதாவது கொடுத்துதவுவார்களென்று மிரா பதிலுரைத்ததும், அவள் கணவனாகிய மாறு வேடங்கொண்ட அரசன், சன்மார்க்க வழிதேடும் பரதேசிகள், பரதேசிகளையல்லவோ யாசிப்பார்களென்று விடைகூறினன். அது கேட்டதும் மிரா நான் உனக்கு எவ்விதமாய் உதவி செய்யக்கூடுமென்று அவனைக்கேட்டாள். நான் உனக்குச் செய்த கொடுந்தீங்குகளை நீ மன்னிப்பாயாக என்று சொல்லிக்கொண்டே அரசன் தன் வேஷத்தைக் களைந்தான். மிரா தன்முன் நின்றவனை உற்று நோக்கிட, அவ்விடத்தில் நிற்பது தனது இன்னுயிர்க் காதலனாகிய அரசனென்றறிந்து கண்களில் நீர்ததும்ப 'ஐய, என் இறைவ, இப்பொழுதேனும் உமக்கு என் ஞாபகம் வந்ததோ' வெனக்கேட்டாள். கேட்டதும் அரசன் தான் செய்ததையெல்லாம் நினைத்துக் கண்ணீர் பெருக்கிட்டான். பின்னர் மிரா அரசனை நோக்கி, 'நீங்களெனக்கு யாதொரு தீங்கையும் விளைவிக்கவில்லை; இவ்வுலகத்தில் காண்பனவெல்லாம் அவனடிமையே, எல்லாம் அவனுடைமையே, எல்லாம் அவனுடையசெயலே யாதலால் நீங்கள் துன்பப்படவேண்டியதில்லை. விதியின் பயனை வெல்ல யாவரால் முடியும்.

'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.'

ஊழைவிட வலிமையுடையவை யெவையிருக்கின்றன; அதை விலக்கும்பொருட்டொ

ன்றை நினைப்பினு மவ்வூழே முன்வந்து நிற்குமல்லவோ. மேலும் அவ்வாறு நேரிட்டதாலல்லவோ யான் பிருந்தாவனப் புண்ணிய நகருக்கு வந்து ஆண்டவன்பால் தொண்டுசெய்து என் ஜன்மம் ஸாபல்லியமாக நேரிட்டது. தாங்கள் செய்த உத்தரவாலல்லவோ எனக்கு இவ்வளவு பாக்கியமும் நேர்ந்தது. ஆதலால் நீங்கள், நான் நல்வழி சார்ந்து நடப்பதில் துணையாயிருந்தீர்களேயல்லது எனக்கு யாதோர் தீங்கும் செய்திடவில்லை யெனப் பலவாறு சொல்லித் தன் கணவனைத்தேற்றினள். பிற்பாடு மிராவும் அரசனும் பிருந்தாவன நகரில் கொஞ்சகாலம் தேவநாம சங்கீர்த்தனைகளில் கழித்து அந்நகரைவிட்டுச் சித்தூர் வந்து சேர்ந்தார்கள். அவளுக்கு பிருந்தாவனத்தை விட்டகலக் கொஞ்சமேனும் மனம் வரவில்லை. ஆயினும் அவள் தன் கணவன் இஷ்டத்திற்கு மாறுபாடாய் நடக்காத உத்தமியாதலாலும், சித்தூர் நகரவாசிகள் தங்கள் அன்புள்ள இராணியாரைப்பார்க்க விரும்பி, அந்நகருக்கு வரவேண்டுமென்று பலகாலும் வேண்டிக்கொண்டபடியாலும் அவள் சித்தூர் வரவேண்டியதாயிற்று. அவள் வந்து சேர்ந்ததும்,—

'மண்களித்தது மாதிரங் களித்தன மலர்மேற்
பெண்களித்தனள் பேரறங் களித்தன கண்டோர்
கண்களித்தன களித்தன கலைவலோர் நெஞ்சம்
விண்களித்தன களித்தது சித்தூர்மா நகரம்.'

மிராவுக்கு மறுபடியும் பலவிதமான இராஜபோக பாக்கியங்கள் வந்தபோதிலும், அவள் அவைகளையொன்றையும் பாராட்டியவளல்லள். தன் கணவனுக்கு இனிமையாய் இல்லறத்தேயிருந்துகொண்டு, இடைவிடாத தெய்வபக்தி பூண்டவளாய், எப்போதும் தேவநாம சங்கீர்த்தனங்களைப் பாடிக்கொண்டும், மற்றவர்களும் பக்திமார்க்கம் புகும்பொருட்டு அவர்களுக்கு ஞானோபதேசங்கள் செய்துகொண்டும், அவள் இவ்வுலகத்திலிருந்த அளவும் சித்தூரில் ஆறு மாதகாலமும், பிருந்தாவனத்தில் ஆறுமாத காலமுமாக வாழ்ந்துவந்தாள்.

மிராபாய் காலஞ்சென்று ஏறக்குறைய 300-வருஷங்களுக்குமேலானபோதிலும். அவள் பெயரோ இன்றும் அழியாமல் வானத்தில் அழுந்திக்கிடக்கும் நக்ஷத்திரங்களென்னப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இவளியற்றிய தெய்வபக்தியில் மிகுந்த பாடல்கள் இன்றும், சிந்து கங்காதீரங்களுக்கும் இமோத்கிரி விந்திய கிரிகளுக்கும் மத்தியிலுள்ள பிரதேசங்களில் யாவராலும் பாடப்பட்டு வருகின்றன. ஆடுமாடுகள் மேய்க்கும் இடையர் கூட்டங்களிலும், தெய்வபக்தியில் சிறந்த பக்தர் குழாங்களிலும், பஜனைகள் செய்யும் பாகவத கோஷ்டிகளிலும், நடனக்கணிகையர் செய்திடும் ஆடல்பாடல் கச்சேரிகளிலும் மிராவின் பாடல்களை இன்றும் கேட்கலாம்.

'நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.'

என்றபடி எக்காலத்தும் வேறுபடாத நற்குடியிற் பிறந்தவர்க்கு உரித்தாகிய வறியவர் சென்றவிடத்து முகமலர்ச்சியும், உள்ளவை கொடுத்துதவுதலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந்நான்கு நற்குணங்களும் மிராபாயிடம் நிறைந்திருந்ததால் அவள் யாவரன்பிற்கும் பாத்திரமுள்ளவளாய் அன்பிற் சிறந்திருந்தாள்.

'கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
மாடல்ல மற்றை யவை.'

'செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்]
செல்வத்து ளெல்லாந் தலை.'

'ஒருவற்கு அழிவில்லாத செல்வம் கல்வியாம், பொன், மணி முதலானவை செல்வமல்லவாம்; சிறப்புடைய செல்வம் கேள்விச்செல்வமே, இச்செல்வம் எல்லாவற்றிற்கும் தலைமையுடையது' என்பதற்கிணங்க மிராபாயிடம் கல்வி கேள்விகளாகிய பெருஞ்செல்வங்கள் சம்பூரணமாயிருந்த படியாலல்லவோ, அவள் தன்னுடைய இராஜபதவியிலிருந்து தவிர்க்கப்பட்டுப் பரதேசியாயிருந்த காலத்திலும் தனது ஞானமான சிறந்த செல்வத்தால் உலகத்தாருக்குத் தெய்வபக்தியாகிற பேருதவியைப்புரிந்து வந்தாள்.

மிராவின் கணவனுகிய அரசன் ஊர்வாயை யடக்கக்கருதி அவளைத்தற்கொலை புரிந்து கொள்ள உத்தரவுசெய்து ஊரைவிட்டு ஓட்டியும். 'ஐந்துவகையாகின்ற பூதபேதத்தினுல் ஆகின்ற யாக்கை நீர்மேல் அமர்கின்ற குமிழியென' அவளெண்ணி அவ்வாறு செய்யத்துணிந்து, பிற்பாடு தெய்வசங்கற்பத்தினுல் அவள் உயிர் நீங்காது பிழைத்து பிருந்தாவன க்ஷேத்திரம்வந்தடைந்த காலத்தில், அரசன் அங்குசென்று அவளைத்திரும்பவும் சித்தூர் வரக்கேட்டுக்கொண்டவுடன், கொடிய பாதகவுத்தரவுகளைப் பிறப்பித்த தன் கணவன்பேரில் கடிந்து சீற்றங்கொள்ளாமல் அவனுடன் அவள் சென்றது, மங்கையற்கரசியாகிய இவ்வுத்தமியின் அரிய பதிவிரதா தருமத்தின் பெருமையையும், துறவியையொத்த சாந்தகுண பூஷணத்தையும் விளக்குகின்றதல்லவோ!

'இன்னுசெய்தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு'

என்றபடி மிராவின் கணவன் அவளுக்குத் துன்பங்களை விளைவித்திருந்தபோதிலும், அவனுக்கு அவள் இனியவைகளைச் செய்யாவிட்டால், அவளிடத்தில் நிறைந்துநின்ற பல நற்குணங்களாலும், அவைகளை யாளுதற்றன்மையாலும் பிரயோசனமொன்றுமில்லாமற் போகுமல்லவோ.

பதிவிரதா சிரோன்மணியும், தெய்வபக்தியில் சிறந்தவளுமாகிய மிராபாயின் இச்சரித்திரத்தைப் படிக்கும் வனிதையர்காள், நீங்களும் மிராவையொத்து அவளிடம் விளங்கிய நற்குணங்களைப்பெற்று உங்களையண்டிய ஏழைகள், வயோதிகர், வியாதியஸ்தர் முதலியவர்களுக்கு உங்களாலான உதவி புரிந்தும்; கல்வி கேள்விகளால் ஞானமளிப்பதாகிய தெய்வபக்தியை எய்தப்பெற்று உங்கள் சுற்றத்தாருக்கும் குழந்தைகளுக்கும் கடவுளிடத்தன்பை யூட்டுவித்தும், உங்கள் கணவர்கடிந்து கோபித்திடினும் வேறு தீத்தொழில் செய்திடினும் முனிவரையொத்த உங்கள் சாந்த குணத்தால் அவர்களை நன்மார்க்கத்திற்குத் திருப்பியும், இல்லறமுறை வழுவாது உங்கள் காதலருடனும் மக்களுடனும் இனிது வாழ்ந்திருந்து, பேரின்ப பாக்கியத்தைப்பெற எல்லாம்வல்ல கடவுள் அருள்புரிவாராக.

'பொருளாகக்கண்ட பொருளெவைக்கு முதற் பொருளாகிப் போதமாகித், தெருளாகிக் கருதுமன பரிமிடிதீரப் பருக வந்த செழுசதேனுகி, யருளானோர்க்ககம் புறமென்றுன்னுத பூரணவானந்தமாகி: யிருள் தீர விளங்குபொருளியாதந்தப் பொருளினை யாமிறைஞ்சி நிற்பாம்;

---

## SONGS.

## பாட்டுகள்.

## ON THE FINITENESS OF HUMAN MIND.

### I.

### "இந்தமனமொரு சிந்தனையந்த்ரம்."

ராகம் - பியாகு - ஆதிதாளம்.

இந்தமனமொரு சிந்தனையந்த்ரம்
ஈசனியற்றி யியக்கியதந்த்ரம்.

சொந்தமும் பொய்யே சுதந்த்ரமும் பொய்யே
அந்தமிலான்னிலையென்பது மெய்யே (இந்தமன—)

(1) நன்மைசெய்தாற் சில தீமையிற்றுவும்
தீமையென்போமவை நன்மையில்மேவும்
நன்மை தீமை யென்று நம்முடையேக்கம்
நன்றல தொன்றிலை யீசன்றன்னேக்கம் (இந்தமன—)

(2) ஓர் முடிவெண்ணுவம் சிற்றறிவாலே
ஒரு கோடியாமீசன் முற்றறிவாலே
சீர் முடிவாகச் *சிவன் சித்தம்வேண்டும்
*சிவன் சித்தமாகிலதெத்தையுந்தாண்டும் (இந்தமன—)

---

*The word சிவன் is used in the larger sense of God.

(3) சித்தர் தனக்குற்ற சீரையேதேடும்
தெய்வம் ஜெகத்துக்கெல்லாம்நன்மைநாடும்
சுத்த சுதந்தர சூக்ஷமநோட்டம்
தோன்றலுக்கேயுண்டகம்போம்மலாட்டம், (இந்தமன—)

---

II.

## ON LOVE AND AUTHORITY.

## அன்போடதிகாரம்.

---

ராகம் - பூர்வகல்யாணி - தாளம் ரூபகச்சாப்பு.

அன்பதிகாரம்போலின்பங் கொடுக்குமோ
வன்பதிகாரங்களே.

மன்பதை மன்னவன் பின்பெதிலுஞ் செல்வ
ரென்பது தீர்ந்திடுந் துன்பங்களென்றன்றோ. (அன்பதிகா—)

(1) அன்பொடு நீதி நடத்தல் செங்கோலே
ஆணைசெலுத்திவிடலாங்கொடுங்கோலே
அன்பிற்கடங்காததில்லை மண்மேலே
ஆணைக் கடங்குதலச்சத்தினாலே. (அன்பதிகா—)

(2) அன்பு சுகம் வளர்க்கும் புகழ்நாட்டும்
ஆணை வளர்தொறு மின்பத்தை வாட்டும்
அன்பிலுண்டாவன நல்லறம் யாவும்
ஆணைவழி நடந்தாற் றீங்குகள் மேவும். (அன்பதிகா—)

(3) அன்பிற்களவில்லை யாணைக்குண்டெல்லை
அன்பு ப்ரம்மரூபமே யாணைவன்றோல்லை
அன்பு சுதந்தரமே யாணை புன்பாசம்
அன்புமாணையு மஜகெஜத்தின் வித்யாசம். (அன்பதிகா—)

---

III.

## ON SELF-ABNEGATION.

## தன்னுடைசமறுத்தல்.

---

ராகம் - நாதநாமக்ரியை - தாளம் ரூபகச்சாப்பு.

இந்தமலையிலோ ரூற்றிருக்கின்றது
சொந்தம் நமக்கதுவே—மனமே.

பந்தவினையெனும் வீடு விட்டப்புறம்
வந்தவர்க்கென்று மானந்தந்தருகின்ற (இந்தமலையி—)

(1) யானெனுங் கோட்டை யெனதெனுங் காவலா
மிவ்விரண்டுங் கடந்து—திவ்ய
ஞானமெதற்கு முறைவிடமொன்றெனும்
ஞாயவழி நடந்து—பல
கானகந்தாண்டிக் கழனிகள் தாண்டிடில்
மோனமிலை நின்று வானமளாவிய (இந்தமலையி—)

(2) ஈசன்மலையென்பரிங்கிதி லூறுவ
தீசனருள்வெள்ளமே—கிட்டி
நேசமுடன் சென்று நிற்பவர் நிர்மல
ராவர் தமதுள்ளமே—நாமுல்
லாசம் பெருகிட ஸ்நானஞ்செய்வோமதில்
பாசந்தவிர்ந்திடப் பானஞ்செய்வோமதை (இந்தமலையி—)

---

## STANZAS ON FREEDOM.

## சு த ந் தி ர ம்.

---

(உண்மைச் சுதந்திரம் இன்னதெனல்.)

1. சவுரியமும் சுதந்திரமும் உறப்பெற்ற பெருந்தகையோர் தனிக்கு லத்தில்
பவுருஷமாய்ப் பிறந்தேமென் றுவப்பெய்தும் மானிடர்காள், பாரின் மீதே
எவனிடையா யினுமொருவன் அடிமையுயிர்ப் பொறைசுமந்தே யிருப்பா னென்னின்,
நவிலுமுங்கள் சுதந்திரமும் சௌரியமும் உண்மையென நயத்தற் பாற்றோ?

(சுதந்திரத்துக் குரியவர் இன்னரெனல்.)

2. நம்போலு மொருமகற்கு நோய் செய்யும் கெடுந்தளைதான் நமது தாளில்
துன்பூறப் பூண்டதெனத் துயர்கொள்ளீ ராமாயின், சொல்லின் நம்போல்
கொன்பாரி விழிதகைசே ரடிமையெவர் பிறருண்டே கூறி னுங்கண்?
அன்பார வடைந்துறநுஞ் சுதந்திரத்துக் குமக்குரிமை யாதுண் டாங்கே?

(இன்னது சுதந்திரமன்றெனல்.)

3. உண்மை நிலைச் சுதந்திரம்தான் உள்ளுவக்கும் நமக்கேயாங் குற்ற தான
திண்மையுறும் தளையதனைச் சிதைத்தெறிந்து செயிரகன்றங் கிருத்த லாமோ?
தண்மையறுந் துவக்கதுபோல் மனநெகிழ்ச்சி யறத்தவிர்ந்து, தவறி லாது
வண்மையுறப் பிறர்க்கிழைக்கும் கடனுண்டென் பதைமறந்து மருவ லாமோ?

(இன்னதே சுதந்திரம் ஆமெனல்.)

4. ஆகாவா லொருநாளும். அனையதொரு சுதந்திரம்தான், அன்பு கூர்ந்து
வாகான சோதரர்போனம் மக்களுறும் தொடக்கதனை வாங்கி நாழும்
போகாது தரித்தவர்க்குச் சுதந்திரத்தைப் புணர்த்திடற்குப் புந்தி நேர்ந்து,
சேகாரும் மனத்தாலும் கரத்தாலும் உரியவற்றைச் செய்த லாமே.

(அடிமையாவார் இன்னரெனல்.)

5. மெலிந்தார்க்கும், சிறுமையினில் வீழ்ந்தார்க்கும், வருமுறுகண் விலக்க வேண்டிப்
பொலிந்தார்த்துப் பிரியாதா ரவர்காணும் பூவுலகி லடிமை யாவார்.
வலிந்தார்கள் பலர்க்கஞ்சி வனப்புளதென் றறிந்ததனை மருவி நாளும்
நலிந்தார்கள் சிலருடனே நண்ணுதார் தாமவரும் அடிமை தாமே.

(இதுவுமது.)

6. பல்லோர்செய் நிந்தனையும், பழிமொழியும், வெறுப்பதுவும், பார வஞ்சிச்,
சொல்லாரும் சிந்தையுறச் சூழ்ந்துகொளற் குரியதொரு துலங்கு முண்மை
கல்லாது மனமெலிந்து கைவிடுக்கும் பேதையரும், காணி னம்மா!
எல்லாரு மிகழ்ந்து வெறுத் திடற்குரிய அடிமைகளா மியம்பின் மாதோ.

## ON THE URGENCY OF VERNACULAR EDUCATION.

### VIEWS OF THE DEWAN OF TRAVANCORE.

CALICUT, NOVEMBER 8.—In the course of his reply to the address presented by the people of Paravoor during his visit Dewan Bahadur M. Krishnan Nair, Dewan of Travancore, made interesting observations on the language problem. He was very glad to note that they were one with the Government in the policy adopted by them regarding vernacular education and heartily appreciated the exertions of the Government to raise the status of the vernaculars. "It is very important," said the Dewan, "that people should appreciate the actual bearing of this momentous question in all respects. All over India there is a new sense of responsibility felt towards the vernaculars. The national consciousness has been awakened; the public have been roused to the extreme urgency of giving greater prominence to vernacular education." They all recognised the great benefits that have accrued to India and must accrue in future from English education, but he was sure they would agree with him when he believed English language would never be the language of the people in India. The West could be explained to millions in the East only through their vernaculars; that was what they had to do in Japan and that was what would have to be done in India also. Philosophy, Science, art and literature of the West would reach the masses in India only through their mother-tongue. The Travancore Government realised this and were trying to do their part of duty. The Dewan exhorted citizens who received English education to translate great books of the West, strengthen the passion for the vernacular and spread modern knowledge among their countrymen through vernaculars.

## SOME THOUGHTS ON VERNACULAR STUDY AND COMPOSITION.

SIR,—My attention having been drawn to the correspondence on the subject now appearing in the columns of the *Hindu*, I desire to make a few observations on the subject in your columns, with your permission. I have in a series of articles contributed to newspapers and reprinted in a pamphlet form discussed the question of Vernacular studies in Madras. It was published in 1898 and though fifteen years have now elapsed and we see a number of books, good, bad and indifferent, advertised by a number of concerns, the defects then pointed out remain more or less the same. Without recapitulating them here, I may refer to the remedies which I then suggested. The first and the most salient point to keep in mind is: "The work of educating the masses is such a large one that it could not be satisfactorily performed either by the Government or the educated classes working alone. It is a gigantic work which would absorb all the energies and resources of both the Government and the educated class; and, therefore, what little of these, either of them could bring to it should be utilised in a cordial spirit of mutual help and co-operation, so that as little of the energies and resources employed for the purpose may be wasted as possible."

I then said that the Government should so arrange the system of education that it imparts in schools, especially in the Primary and Lower Secondary Departments, as to give a good grounding in the vernacular to the young student who goes up to the Upper Secondary Department and create in him a taste for his native language." This is far from being done yet, though there has been much reform or overhauling of the system of school-education. To repeat what I said 15 years ago, "a reform in the system of Primary and Lower Secondary education is more urgently called for, in the interests of the vernaculars," than anything else. The principle of *discrimination* is still wanting in many of those who appear as the accredited representatives of "schemes" for the improvement of vernacular studies and composition.

"In speaking of popular Vernacular literature" I wrote in 1898, "care should be taken to discriminate between a healthy growth of that literature and a *production* of it. Healthy growth implies production and distribution. Production without distribution, will be mere accumulation and not real growth. The present decay of the vernaculars is due as much to the want of good literary activity (as distinguished from the mere book-making proclivity which is now in evidence to some extent) among the educated classes as to the absence of a

healthy taste for reading among the literate portion of the people. Our aim in any attempt at reform should be to provide for the supply of both these wants. A good grounding in the Vernacular and the creation of a real taste for the same in the early days of school life is absolutely essential for the success of any reform that aims at the improvement of the vernaculars as a medium for the diffusion of useful knowledge among the mass of the people. I have personally known cases of youngmen who have acquired a taste for their Vernacular in early boyhood but who have taken to the study of Sanskrit from the fourth form upward, having kept touch with their mother-tongue, owing to the early taste imbibed, to such an extent as to be able to wield it with much greater force and ease in the diffusion of useful knowledge on subjects they have themselves studied, than most of the graduates who have carried their vernacular studies up to the B. A. Degree Examination." My views thus expressed 15 years ago, I see no reason to change in spite of the multiplication of books which I see and welcome as a sign of the times but which is not yet sufficiently developed to form a sign of "healthy growth." For, most of the young writers are poor in thought and poorer in the method of giving expression to what little they are able to think.

"Language is the slave of thought" and only a cultured mind that can well control the process of thinking and use it according to its own enlightened will," can command that "facility of expression" which is really at the bottom of what we term "literary style."

Most of our educated men who have essayed hard to produce a "book" in the vernacular with rare exceptions, have shown themselves to be poor thinkers and most of the young men who take to the "making of books" as a makeshift are no thinkers at all. It is the facility and aptitude of expression as well as its amplitude when language is used as a vehicle for the expression of thought and emotion as well as mental pictures formed of "things percevied" by the apperceiving mind that really go to the making of *literature* in any language and judged by this standard our current literature is woefully poor and not worth the name. It is only *thinkers* that can find fitting expressions for the thoughts they think and not traffickers in borrowed thoughts.

C. V. SWAMINATHA IYAR.

—*The Hindu of* 23*rd July* 1913.

---

## APPEAL FOR CO-OPERATION.

(*From the Hindu of July* 28*th*, 1913.)

Sir,—In thanking you for promptly publishing my first few thoughts on the subject, I beg leave to point out that it is a most important work and is of such a nature that we cannot afford to dally with it as some people seem inclined to do. In concluding the third of my series of articles (1898) in which I took a brief survey of the question of vernacular studies as affecting the education and enlightenment of the masses, I laid stress on the necessity of "real hard work" as opposed to "paper schemes" merely for reclaiming the wild waste of popular ignorance. Now, as I said before, "I do not mean to minimise the importance of schemes" as facilitating the production of maximum results with minimum waste of energy and labour : but I feel that we are relying too much on "Schemes" for results, while doing too little of work to achieve them."

In this view I was heartily supported by almost all the prominent educationists of the time, and Dr. Duncan and Mrs. Brander, as well as many others, helped me with their ready sympathy and valuable advice in the carrying out of my work. Among those who took a kindly interest in my efforts and encouraged me in my work was the late Rao Bahadur M. G. Ranade, then a Judge of the Bombay High Court. Writing to me at the time on the subject he remarked:

"I have read these articles with great interest. . . . With much you have written I entirely agree. *Earnest work is what is wanted*, but in this matter as in others, there is room for all workers and I should myself not come in the way of any experiment being tried from various quarters." (The italics are mine.) Writing later on, after reading a leader which appeared in the newspaperwhich published these articles, he wrote to me to say:—"The leader in the *Madras Mail* of 9th September, makes the suggestion which you have practically carried out. You will have to be disappointed of the result of that experiment but as I have already written to you such disappointments are inevitable. You should make another experiment under more favourable circumstances. I feel sure you will succeed."

As I went on working and spending myself almost single handed, taking up the question of village sanitation for some time, I found my health break down, and before I could recover my shattered health, misfortunes came to me in battalions, so to say, and laid me low, striking me as an English friend said "the heaviest of blows that could befall a man." I have again returned to my "old love"—the encouragement of vernacular study and composition. The well-conceived organisation of 'Association of Helpers' which was more or less in working order all through the villages, unobtrusively working to create a taste for general reading with "reading circles" in almost every village where there was a well-established school, public or private, hath fallen into desuetude. But the spirit is there and still working and I shall be glad to have the co-operation of all good men and true in my self-imposed task. I have grown old but with age hath come wisdom while my heart is yet quite young and tender like that of a child. With this my new resolve hath come a new life to the *Vivekachintamani* which after 21 years of approved service is now transformed again into a Boy's Journal conducted by boys for the use of young-folk in which term I include all those who have not lost their young hearts and the buoyancy of spirit which it ever conveya.

C. V. SWAMINATHA IYER.